உ

சிவமயம்.



# பக்தி (வைராக்கிய) சதகத்

தோத்திரமும்

# தோத்திரப் பிரகாசம்

என்னும் உரையும்.



திருப் பூவணம்

காசிகா நந்த ஞா நாசார்ய ஸ்வாமிகள்.



விலை அணா மூன்று.

உ

சிவமயம்.

திருப் பேரூர்

சாந்த லிங்க சுவாமிகள்

இயற்றிய

# பக்தி சதகத்தில் உள்ள

# தோத்திரமும்

திருக்களர்

ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

பாத சேகர ராகிய

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

# தோத்திரப் பிரகாசம்

என்னும் உரையும்.



இவை

மதுரை மீநலோசநிப் பிரசில்

பதிப்பிக்கப் பெற்றன.

1931.

உ

சிவமயம்.

# முகவுரை.

---

மோக்ஷம் அடைதற் குரிய புண்ணிய பூமி யாகிய இப் பாத கண்டத்தில் சோழ வள நாட்டில் பட்டீச்சுரம் என்னும் ஊரில் சமாதி யுற் றிலங்கும் துறையூர் சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் வீர சைவப் பெரியார் மரபில் வந்து காஞ்சி நதியை யுடைய மேலைச் சிதம்பரம் என்னும் பேரூரின்கண் சுமார் மூன் னூறு வருடங்கட்கு முன் சமாதி யுற்று விளங்கும் சாந்த லிங்க ஸ்வாமிகள், ஜீவ காருண்யம் ஈசுவர பக்தி பாச வைராக்கியம் பிரஹ்ம ஞானம் நான்கும் உலகத்தில் மந்தர்களுக்குந் தெள்ளிதின் விளங்கும்படியாக, அறு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம் 22 உள்ளதாய்க் கொலை மறுத்தல் என்னும் ஒரு நூலும், 100 விருத்தம் உள்ளதாய் (பக்தி சதகம்) என ஒரு நூலும், எழு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம் 100 உள்ளதாய் வைராக்கிய தீபம் என ஒரு நூலும், 100 உந்தீ பறத்தல் பா உள்ளதாய் அவிரோத வுந்தியார் என ஒரு நூலும் முறையே இயற்றினர். அந் நூலின்கண் "இக் கொலை மறுத்தல்" "இந் நூற்குப் பெயர் வயிராக தீபம் என்று உரைத்திடப் படும்" "அவிரோத வுந்தி யென்று இந் நூல் நாமம் ஆம்" என்று மூன்று நூலிற்கும் பெயர் தம் வாக்கால் கூறியிருப்பது போன்று "பக்தி சதகம்" "வைராக்கிய சதகம்" என்று தம் வாக்கினுல் கூருமையின் வழங்கி வரும் முறைப்படி "பக்தி சதகம்" என்னும் பெயரே பொருத்தம் உடையதாம்.

சாந்த லிங்க ஸ்வாமிகளின் மாணாக்கர் விருத்தாசலத்திற் சமாதி யுற் றிலங்கும் குமார தேவ சுவாமிகள். அவர் மாணாக்கர் திருப் போரூரின்கண் சமாதி யுற் றிலங்கும் சிதம்பர சுவாமிகள். இவர்

கள் கொலை மறுத்தல் முதலிய நான்கு நூற்கும் பிரமாணத் தோடு விரிவுரை யியற்றியிருக்கின்றார்கள். அவ்வுரையின்கண்ணும் "வைராக்கிய சதகம் என இந்நூற்குப் பெயர் என யாண்டும் வரையப்படவில்லை.

"பக்தி சதகம்" என்னும் நூலின் முதற் பாதி ஐம்பது செய்யுளும் சாத்திர ரூப மாக இருத்தலின் அதற் குரை யியற்றிப், பிற் பாதி ஐம்பது செய்யுளும் நடேசப் பெருமானிடம் தோத்திர ரூப பக்தியாக இருத்தலின் அதற்கு உரை யியற்றாது விடுத்தனர். தோத்திர ரூப ஐம்பது செய்யுளுக்கும் உரை யிருக்கின் படிப்போர்க்குப் பொருள் எளிதில் விளங்கும் எனக் கருதி தோத்திரப் பிரகாசம் எனப் பெயர் ஈந்து ஒருரை எழுதி கி. பி. 1925-வது வருஷத்தில் முற்றுவித்தனம்.

காசிகாநந்த "ஞாநாசார்ய ஸ்வாமிகள்"
திருப் பூவணம்.



உ

சிவமயம்.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்
திருப்பூவணம்.

# பாயிரம்.

---

கருணைநன் கியைந்து வைகைசூற் கரையிற்
களிக்குநங் கயமுக விறையைத்
தெருளணி யீசற் கீந்ததே வென்னுஞ்
செங்குரு வாறுமா முகனை
மருளினைப் போக்கும் பூவண விறையை
மாதுமின் னனையநா யகியைக்
கருணைநல் வீர சேகர விறைவன்
கழலினைக் கருத்தினில் வைப்பாம்.

உருவம தின்றி யொளிர்ந்திடு முகந்த
தேசிக னெண்டனிப் பதத்தைச்
சருவமா யிலகு முக்திரா மேசர்
சரண்டனை யருணநல் லசலக்
குருவடி தனைச்சி தம்பா ஞான
குருவினல் லடியினை யன்பர்க்
கருளுறும் வீர சேகர ஞான
வாரிய னடியினைத் தொழுவாம்.

பத்தியி னோடு முத்தியை யீயப்
பாருளோ ரியாவரும் பரவ
வெத்திசை யோருஞ் சுத்தமெய்த் தவளன்
றிணையடி தனைமிகப் பொருந்தச்
சித்தமார் சிதம்ப ரத்தலம் வைகித்
தெளிந்ததே சிகவரு ணசல
மத்தமா ரடியை வழுத்தியே வர்க்கான்
மாநத்தினு னினைந்துபோற் றுதுமே.

பாரமாம் பவத்தைப் பறித்திடக் கருணை
பாலிக்கும் பான்மையாய் வந்து
நாரந்தான் சிறிது மின்றியே யுடலை
நானெனும் புன்மதி யெனையே
தூரமோ டணிமை யின்றியுன் னுருவாஞ்
சொப்பிர காசமென் றுரைத்த
வீரசே கரஞா நதேசிக வடியை
விருப்புடன் மநத்தினிற் கொளுவாம்.

யாத்திர ராஞோர் பாணிடம் பத்தி
பண்ணியே பரகதி யடையச்
சாத்திர மோடு தோத்திர மாகச்
சதகமொன் றியற்றினர் சாந்த
நேத்திர லிங்க தேசிகர் தோத்தி
ரங்கள்பா வைம்பதும் விளங்கத்
தோத்திரப் பிரகா சம்மெனு மூலரையச்
சொர்சுவை பொருந்தவே சொற்றேன்.

## இந் நூலுக்கு அவதாரிகை.

மநம் தானும் அன்று தன் வயமும் அன்று என்று அறிந்து அதனை விடுத்துத் தன்னையும் அதனையும் கூட்டவும் பிரிக்கவும் வல்ல சிவத்தை நோக்கி மேல் விவேகம் கூறுகின்றது. (என்பது சிதம்பர சுவாமிகள் வாக்காம்.)

உ

சிவமயம்.



## பக்தி (வைராக்கிய) சதகத் தோத்திரமும்

# தோத்திரப் பிரகாச உரையும்.

பொல்லாதவெ னெஞ்சமோ ரைந்துபு லன்கடம்பா
லல்லாதரை மாத்திரை யுந்நின்ன டிக்கணன்பாய்
நில்லாதிதற் கென்னைசெய் கேனிதை நின்றிடென்றே
சொல்லாய்திருத் தில்லையுண் மேவிய சோதிநீயே. (1)

(இ-ள்) திரு - அழகிய, தில்லையுள் - தில்லை வநத்தின்கண், மேவிய-பொருந்தியிருக்கப்பட்ட, சோதி-பிரகாச ஸ்வரூபரே, என்-எனது, பொல்லாத-வஞ்சகத் தன்மையோடு கூடிய, நெஞ்சம்-மநம், ஓர்-(இழிவிற்) சிறந்த, ஐந்து புலன்கள் தம்பால்-பஞ்சேந்திரிய வாயிலாகப் பஞ்ச விஷயங்களினிடத்தில் செல்லுகின்றதே, அல்லாது-அன்றி, உன்-தேவரீரது, அடிக்கண்-திருவடித் தாமரையினிடத்து, அன்பாய்-பக்தியோடு, அரை மாத்திரையும்-அரை க்ஷணமாயினும், நில்லாது-நிற்கவில்லை, இதற்கு-இந்த மநதை (நின் திருவடிக்கண்) நிறுத்துவதற்கு, என்னை-யாது, செய்கேன்-செய்வேன், நீயே-தேவரீரே, இதை-இந்த மநதை, நின்றிடு-(திருவடிக்கண்) இருப்பாயாக, என்று-என, சொல்லாய்-கூறுவீராக. எ-று. ஓ-அசை.

நீயேயருள் செய்யினல் லாதுபொய் நெஞ்சவஞ்சத்
தீயேனுனை வந்தடை தற்கொரு செய்கைகாணேன்
பேயேனுமுனைத்தொட ரும்படி பேசுதில்லைத்
தூயோயொரு பாயம்வி டாதினிச் சூழ்ந்துநின்றே. (2)

(இ-ள்) தில்லை-தில்லை (வநத்தின்கண் எழுந்தருளியிருக்கப் பட்ட), தூயோய்-பரிசுத்தமானவரே, நீயே-தேவரீரே, அருள் செய்யின்-அநுக்கிரகம் செய்தால், அல்லாது-அன்றி, பொய்-மித்தையான, வஞ்ச-வஞ்சகத்தன்மையினையுடைய, நெஞ்ச-மநம் (வாய்ந்த), தீயேன்-பாவியாகிய யான், உனை-தேவரீரை, வந்து-(சரணாகதியாக) வந்து, அடைதற்கு-அடைதற்கு, ஒரு-ஒரு விதமான, செய்கை காணேன்-கைங்கர்யங்களும் செய்திலேன், பேயேனும்-பேய்த்தன்மையோடு கூடிய யானும், உனை-தேவரீரை, தொடரும்படி-வந்து அடையும்படியாக, இனி-பின்னும், விடாது-(விட்டு) விடாது, சூழ்ந்து-பற்றி, நின்று-இருந்து, ஒரு-ஒரு, உபாயம்-உபாயத்தினை, பேசு-உபதேசிப்பீராக. எ-று. ஏ-அசை.

நின்றாய்திருத் தில்லையு ளாயென்ற னெஞ்சினுள்ளே
யென்றாலுமெ னக்கதி தூரம தாயிருந்தா
யொன்றாலுமு னைத்தொடர் கிற்குமு பாயங்காணேன்
மின்றாழ்சடை யாய்தமி யேற்குவி ளங்கிடாயே. (3)

(இ-ள்) திரு-அழகிய, தில்லையுளாய்-தில்லை வநத்தின்கண் எழுந்தருளி யிருக்கப்பட்ட ஸ்வாமின், மின்-மின்னல் (போன்றும் பிரகாசம் பொருந்தி), தாழ்-நீண்ட, சடையாய்-சடையினையுடைய ஸ்வாமின், என்-அடியேனது, நெஞ்சினுள்ளே-மநத்தின்கண்ணே, நின்றாய்-இருக்கின்றீர், என்றாலும் ஆயினும், எனக்கு-அடியேனுக்கு, அதிதூரமது ஆய்-மிகவும் சேய்மைத்தாய், இருந்தாய்-இருக்கின்றீர், உனை-தேவரீரை, தொடர்கிற்கும்-அடையும்படியாக, ஒன்றாலும்-ஒரு வித, உபாயம்-உபாயத்தையும், காணேன்-(யான்) உணர்ந்தி

லேன், தமியேற்கு-அடியேனுக்கு, விளங்கிடாய்-(அடையும் உபாயத்தை விளங்கும்படி) உபதேசிப்பீராக. எ-று. தன் ஏ-அசை.

விளங்கும்மெழிற் பேதையர் காதல்வி டாதயானக்
களங்கம்மறு வோர்தொழு நின்கழல் காணுமாறென்
றுளங்கும்மொளித் தூமதி சூடிய தோன்றலேயென்
னுளங்கொண்டிடு நீயினிக் கோயில தாவுவந்தே. (4)

(இ-ள்) துளங்கும் - விளங்காநின்ற, ஒளி - பிரகாசத்தினையுடைய, தூ - பரிசுத்தமான, மதி-(மூன்றாம்) பிறையை, சூடிய-அணிந்திருக்கப்பட்ட, தோன்றலே-பெருமையிற் சிறந்த பரசிவமே, விளங்கும்-(ஆடை ஆபரணாதிகளோடு கூடி) விளங்காநின்ற, எழில்-அழகினையுடைய, பேதையர்-பெண்களிடத்து, காதல் - விருப்பத்தினை, விடாத-விட்டு நீங்காத, யான்-நான், அக் களங்கம்-(பெண்களிடத்து விருப்பம் வைப்பதாகிய) அந்தத் தோஷம், அறுவோர்-நீங்கியிருக்கப்பட்ட பெரியோர்கள், தொழும்-வணங்குகின்ற, நின்-தேவரீரது, கழல்-திரு வடித் தாமரையை, காணும்-தெரிசிக்கும், ஆறு-வழி, என்-எப்படி, இனி-(அதனால்) மேல், நீ-தேவரீர், உவந்து-பிரியத்தோடு, என்-அடியேனது, உளம்-மனதை, கோயிலதா-ஆலயமாக, கொண்டிடு-கொள்ளுவீராக. எ-று. ஏ-அசை.

வந்தித்திடு வார்பவ நோய்க்கும ருந்தனையைச்
சந்தித்திடு வான்மறித் தான்மனந் தப்பியப்பா
விந்தப்புவி யுங்கட லுங்கடந் தேகுமென்று
லெந்தப்படி யுய்வதி யான்றில்லை யெம்பிரானே. (5)

(இ-ள்) தில்லை-தில்லை (வனத்தின்கண் எழுந்தருளியிருக்கப்பட்ட), எம்-எமது, பிரானே-தலைவனாகிய ஸ்வாமிந், வந்தித்திடுவார் நமஸ்கரிப்பவர்களது, பவ நோய்க்கு-பவ வியாதிக்கு, மருந்தனையை ஔஷதம் போன்றிருக்கப்பட்ட தேவரீரை, சந்தித்திடுவான்-சந்தித்

தற்பொருட்டு, மறித்தால்-(மநதைத்) திருப்பினல், மநம்-(அந்த) மநம், தப்பி-(எனது மறியலைக்) கடந்து, அப்பால்-அதன் பின், இந்தப் புவியும்-இந்தப் பூமியினையும், கடலும்-கடலினையும், கடந்து-தாண்டி, ஏகும்-செல்லும், என்றால்-ஆயின், யான்-நான், எந்தப்படி-எங்ஙனம், உய்வது-(தேவரீரது திரு வடியை) அடைவது, (அடைய முடியாது என்றபடி) எ-று.

பிரானேதிருத் தில்லையு ளாயன்றிப் பேதையேன்மு
ன்னோரானேறிவர்ந் தம்பிகை யோடெளி தோடிவந்தாய்
வாரானோவின மெம்மிறை யென்றுனை நாடிவாடி
யிராநாயடி யேற்கெதிர் தோன்றிலை யின்றிதென்னே (6)

(இ-ள்) பிரானே-தலைவனே, திரு - அழகிய, தில்லையுளாய்-தில்லை வநத்தின்கண் எழுந்தருளியிருக்கப்பட்ட ஸ்வாமிந், அன்று-முன் ஒரு காலத்தில், இப் பேதையேன்-இந்தப் பேதையாகிய அடியேனது, முன்-எதிரில், ஒரு-ஒரு, ஆன் ஏறு-ரிஷப வாகநத்தின் மீது, இவர்ந்து-எழுந்தருளி, அம்பிகையோடு-தேவியோடு, எளிது-சுலபமாக, ஓடிவந்தாய் - சீக்கிரம் வந்து தெரிசநம் கொடுத்தீர், இனம்-இன்னும் (ஒரு முறை), எம்-எமது, இறை-பரமசிவன், வாரானோ-வந்து தெரிசநம் கொடுக்கமாட்டாரா, என்று-எனக் கருதி, உனை-தேவரீரை, நாடி-தியாநித்து, வாடி-வாட்ட முற்று, இரா-இருக்கின்ற, நாய் - நாயினும்(கீழ்ப்பட்ட), அடியேற்கு - அடியேனுக்கு, இன்று-இப்பொழுது, எதிர்-எதிரில், தோன்றிலை-எழுந்தருளி வர இல்லை, இது-இது, என்-என்ன காரணம் (யான் அறிகிலேன்). எ-று. ஏ-அசை.

என்னுயக னேபிமை யோர்தொழு மீசனேசெம்
பொன்னார்திரு வம்பலத் தாடிய பூதநாதா
வுன்னாரு ளாலினி வீட்டிடை யுய்த்திபின்றேற்
பின்னருயக் கொள்ளவ லாரென்பி ழைகடீர்த்தே. (7)

(இ-ள்) என்-அடியேனது, நாயகனே-எஜமானனே, இமை யோர்-தேவர்கள், தொழும்-வணங்குகின்ற, ஈசனே - பரசிவனே, செம்-சிறந்த, பொன்-பொன், ஆர்-பொருந்திய, திரு-அழகிய, அம்ப லத்து-சபையின்கண், ஆடிய-(ஆநந்தத் தாண்டவம்) செய்த, பூத-பூதங்களுக்கு எல்லாம், நாதா-இறைவனே, இனி-இனி மேல், உன்-தேவரீரது, ஆர்-நிறைந்த, அருளால்-கிருபையினால், வீட்டிடை-மோக்ஷத்தின்கண், உய்த்தி-அடைவிப்பீராக, இன்றேல்-அடையா திருப்பீராயின், பின்-பின்னர், என்-எனது, பிழைகள்-குற்றங்களை, தீர்த்து-கடிந்து, உய-மோக்ஷத்தினை அடையும்படியாக, கொள்ள-(அடிமையாக்கிக்)கொள்ள, வலார்-வல்லவர், ஆர்-யார் (இருக்கின்றார்கள் ஒருவரும் இலர் என்பது கருத்தாம்). எ-று. ஏ-அசை.

தீராதவோ ரைம்புலச் சேட்டையுந் தீர்ந்துபோய்வெங்
கூரார்மழு வாளிநின் பாதங்கு ழைந்துபோற்றி
நீராயுரு கித்தொழு தூன்னெதிர் நிற்கும்வண்ண
மோர்நாளுள தோதமி யேற்குமு ரைத்திடாயே. (8)

(இ-ள்) வெம்-கொடிய, கூர்-கூர்மை, ஆர்-பொருந்திய, மழு வாளி-பிரகாசம் பொருந்திய மழு ஆயுதத்தையுடைய ஸ்வாமி!, தீராத-நீங்காத, ஓர்-ஒப்பற்ற, ஐம்புல-பஞ்சேந்திரியங்களின், சேட்டையும்-சேஷ்ட்டைகளும், தீர்ந்து போய்-நீங்கி, நின்-தேவரீரது, பாதம்-திருவடித் தாமரைகளை, குழைந்து - (மநம்) நைந்து, போற்றி - துதித்து, நீராய்-(நேத்திரத்தினின்றும்) ஜலம் ஒழுகும்படியாய், உருகி-(மநம்) நெகிழ்ந்து, தொழுது-வணங்கி, உன்-தேவரீரது, எதிர்-சந்நிதியில், நிற்கும் வண்ணம்-நிற்கும்படியாக, தமியேற்கும்-அடியேனுக்கும், ஓர்-ஒரு, நாள்-நாள், உளதோ-இருக்கின்றதா, உரைத்திடாய்-(அங்ஙனம் இருக்குமாயின் அதனை அடியேனுக்குக்) கூறுவீராக. எ-று. ஏ-அசை.

உரையேனனி வாய்திறந் துன்புகழ் தன்னைநாளும்
விரையார்மல ரிட்டருச் சிக்கவி ருப்புமில்லேன்
கரையேனுள நின்னினைந் தெத்திறத் தாற்கடப்பேன்
றிரையார்வினை யார்பிற விக்கடற் றில்லையானே. (9)

(இ-ள்) தில்லையானே - தில்லைப்பதியின்கண் எழுந்தருளி யிருக்கப்பட்ட ஸ்வாமிந், உன்-தேவரீரது,புகழ் தன்னை-கீர்த்தியினை, நாளும்-பிரதி தினமும், நனி-நன்றாக, வாய்-வாக்கினை, திறந்து-திறந்து, உரையேன்-கூறிலேன், விரை-வாசனை, ஆர்-பொருந்தி யிருக்கப்பட்ட, மலர்-புஷ்பங்களைக் கொண்டு வந்து, இட்டு-(தேவரீரது திரு வடியில்) போட்டு, அருச்சிக்க-பூசிக்க, விருப்பும்-விருப்பமும், இல்லேன்-இல்லாதவனாயிருக்கின்றேன், நின் - தேவரீரை, நினைந்து-நினைத்து, உளம்-மநம், கரையேன்-கரையாதவனா யிருக்கின்றேன், வினை-(அதனால்) கருமங்கள், ஆர்-சேர்ந்துள்ள, பிறவி-ஜெநநமாகிய, திரை-அலைகளை, ஆர்-பொருந்தியிருக்கின்ற, கடல்-சமுத்திரத்தினை, எத் திறத்தால்-எந்தத் தன்மையினால், கடப்பேன்-தாண்டுவேன் (தாண்ட முடியாது என்பது கருத்தாம்). எ-று.

ஆனேறி யூர்ந் தென்னெதி ரேவிரைந் தன்றுவந்தோய்க்
கேனோவெறுப் பிப்பொழு தோர்சற்றி ரங்குகில்லாய்
நானோவறி வேனுன்பெ ருமையை நம்பனேநீ
தானேபொறுத் தாளுகண் டாயென்ற வறெலாமே. (10)

(இ-ள்) நம்பனே-கடவுளே, அன்று-முன் ஒரு காலத்தில், ஆன் ஏறு-ரிஷப வாகநத்தில், இவர்ந்து-எழுந்தருளி, என்-அடியேனது, எதிரே-எதிரில், விரைந்து-சீக்கிரத்தில், வந்தோய்க்கு-வந்த தேவரீருக்கு, இப்பொழுது-இக்கால், வெறுப்பு-துவேஷம், ஏனோ-ஏன், ஓர் சற்று-கொஞ்சம், இரங்குகில்லாய்-இரக்கம் வைப்பீராக, உன்-தேவரீரது, பெருமையை-மகிமையை, நானோ-யானோ, அறிவேன்-உணர்வேன் (உணரமாட்டேன் என்றபடி), நீ தானே-தேவரீரே,

என் - அடியேனது, தவறு-குற்றங்கள், எலாம் - யாவற்றையும், பொறுத்து-க்ஷமித்து, ஆளு-ஆட்கொள்வீராக. எ-று. தான் ஏ-அசை. கண்டாய்-முன்னிலை அசை.

எல்லாமறி வோயறிந் தேவகுத் திட்டவாறே
யல்லாற்றமி யேனும்பு ரிவதொன் றில்லையானாற்
பொல்லாமைசெய் வித்தவ னீபொறுப் பானுநீகல்
வில்லாயினித் தேனைப்ப வத்தினி விட்டிடேலே. (11)

(இ-ள்) எல்லாம்-யாவற்றையும், அறிவோய்-உணர்ந்திருக்கப் பட்ட ஸ்வாமிந், கல்-கல்லை, வில்லாய்-வில்லாகச் செய்த ஸ்வாமிந், அறிந்தே-(தேவரீர்) உணர்ந்து, வகுத்திட்ட-வகுத்த, ஆறே-மார்க் கத்தின் பிரகாரம் (நடந்து வருவதே), அல்லால்-அன்றி, தமியேனும் -அடியேனும், புரிவது-(சுதந்திரமாகச்) செய்வது, ஒன்று-ஒன்றும், இல்லை-இல்லை, ஆனால்-ஆனதால், நீ-தேவரீரே, பொல்லாமை-பாவத் தை, செய்வித்தவன்-செய்வித்தவரும் ஆவீர், நீ-தேவரீரே, பொறுப் பானும்-(அதனை) க்ஷமிப்பவரும் ஆவீர், இனி-மேல், இளைத்தேனை-(சம்சாரத்திற் கிடந்து) வருந்திய என்னை, பவத்து-ஜநந(மரண)த் தின்கண், விட்டிடேல்-விடாதிருப்பீராக. எ-று. ஏ-அசை.

ஏலக்குழ லாரநு ராகமதென் னுமாயா
சாலக்குணந் தேற்கன தின்னரு டந்துகாப்பாய்
நீலக்கள மாலய னோடுமுன் னேடிவாடு
மூலக்கந லேகந லேந்துகைம் முக்கணனே. (12)

(இ-ள்) நீலக் கள-நீல கண்டத்தினை யுடைய ஸ்வாமிந், மால்-மகாவிஷ்ணுவும், அயன்-பிரமதேவனும், முன்-பூர்வத்தில், நேடி-(அன்னம் வராஹ ரூபமாக மேலும் கீழுமாகத்) தேடி, வாடும்-(ஸ்வ ரூபத்தினை அறிய முடியாது) வாட்டமுற்றிருக்கும்படி செய்த, மூலக் கநலே-காரணாக்நி சொரூபரே, கநல்-அக்நியை, ஏந்து-தாங்கு

கின்ற, கை-அஸ்தத்தினை யுடைய, முக்கணனே-திரிநேத்ர தாரியே, ஏல-வாசனையோடு கூடிய தைலங்கள் அணிந்த, குழலார்-கூந்தலை யுடைய பெண்களது, அநுராகமது-விருப்பம், என்னும்-ஆகிய, மாயா -மாயை யென்னும், சாலக்குள்-வலைக்குள் (கிடந்து), நைந்தேற்கு-நைவுற்றிருக்கின்ற அடியேனுக்கு, உனது-தேவரீரது, இன்-இனிய, அருள்-கிருபையினை, தந்து-கொடுத்து, காப்பாய்-ரக்ஷிப்பீராக. எ-று. அநுராகமது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. ஒடு-அசை நிலை.

கண்ணார் நுதலோய்கடை யேனையு மொன்றதாயே
யெண்ணாவரு ளன்றுசு ரந்துளைக் கின்றிலாதென்
விண்ணோரிறை யோய்க்குமுண் டோசொல்வி றுப்பினோடு
தண்ணார்விருப் புங்கரிப் போர்வைய சாற்றிடாயே.(13)

(இ-ள்) கண் ஆர் நுதலோய்-நெற்றிக் கண்ணை யுடைய ஸ்வாமிந், கரி போர்வைய-யானைத் தோலைப் போர்வையாக வுடைய ஸ்வாமிந், அன்று - முன் ஒரு காலத்தில், கடையேனையும்-தாழ்வோடு கூடிய என்னையும், ஒன்றது ஆய் - (அடியார்களுள்) ஒருவனாக, எண்ணு-கருதி, அருள்-காருண்யம், சுரந்துளக்கு-மிகுந்திருக்கப் பட்ட தேவரீருக்கு, இன்று-இப்பொழுது, இலாது-(காருண்யம்) இலாதது, என்-யாது காரணம், விண்ணோர் இறையோய்க்கும்-தேவ தேவனாகிய பரமேஸ்வரருக்கும், சொல்-கூறுநின்ற, வெறுப்பின்-வெறுப்பும், தண்-குளிர்ச்சி, ஆர்-பொருந்தியிருக்கப்பட்ட, விருப்பும்-விருப்பமும், உண்டோ - இருக்கின்றதா, சாற்றிடாய்-(அங்ஙனம் இருந்தால்) கூறுவீராக. எ-று. ஒடு ஏ-அசை. ஒன்றது என் பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

சாற்றாய்திருத் தில்லையுள் ளாய்சிவ சங்கராவெண்
ணேற்றாய்கடை யேனுயு மாறென்ற னெஞ்சுளஞ்சிப்
போற்றாதிருந் தேன்வருந் தாமலென் புத்திதன்னைத்
தேற்றாயொரு நீயினி யன்பினைச் செய்யுமாறே (14)

(இ-ள்) திரு-அழகிய, தில்லையுள்ளாய்-தில்லை வநத்தின்கண் எழுந்தருளி யிருக்கப்பட்ட ஸ்வாமிந், சிவ சங்கரா-சிவ சங்கரனே, வெண்-வெண்மையான, நீற்ருய்-விபூதி யணிந்திருக்கப்பட்ட ஸ்வாமிந், கடையேன்-தாழ்வாகிய யான், உயும்-மோக்ஷத்தினை அடையும்படியான, ஆறு-வழியை, சாற்ருய்-உபதேசிப்பீராக, என்-அடியேனது, நெஞ்சுள்-மநத்தின்கண், அஞ்சி-பயந்து, போற்ருதிருந்தேன்-தோத்திரம் செய்யாதிருந்தேன், என்-அடியேனது, புத்தி தன்னை-(இவ்வாருய) புத்தியினை, வருந்தாமல்-வருத்தமடையாமல் இருக்கும்படி, இனி-மேல், அன்பினை-பக்தியினை, செய்யும்-செய்யும், ஆறு-வழியினை, நீ - தேவரீர் (உபதேசித்து), ஒரு - ஒருதலையாக, தேற்ருய் - தெளிவிப்பீராக. எ - று. ஏ தன் "புத்தி தன்னை" என்பதில் தன் அசை.

மாருயவோ ரைந்துபு லன்வலி மாய்த்துநெஞ்சை
நீருர்திரு மேனிய வுன்கணி றுத்தமாட்டே
னேருதப வக்கட லேறவு மெண்ணிநைந்தேன்
கூருயென தெண்ணமெவ் வண்ணங்கை கூடுமன்றே. (15)

(இ - ள்) நீறு - விபூதி, ஆர் - பொருந்தி யிருக்கப்பட்ட, திருமேனிய - திவ்ய மங்கள மூர்த்தத்தை யுடையவரே, மாறு ஆய - விரோதி ஆகிய, ஓர் - ஒப்பற்ற, ஐந்து புலன் - பஞ்சேந்திரியங்களினது, வலி - சாமர்த்தியத்தினை, மாய்த்து - கெடுத்து, நெஞ்சை - மநத்தினை, உன்கண் - தேவரீரிடத்தில், நிறுத்தமாட்டேன் - நிறுத்தவில்லை, ஏருத - ஏற முடியாத, பவ கடல் - ஜெந்ம சமுத்திரத்தின், ஏறவும் - (கரையை) அடையவும், எண்ணி - கருதி, நைந்தேன் - வாடினேன், எனது - அடியேனது, எண்ணம் - கருத்து, எவ்வண்ணம் - எப்படி, கைகூடும் - சித்திக்கும், கூருய் - (நீர்) கூறுவீராக. எ - று. அன்று ஏ-அசை.

அன்றேதமி யேற்கெளி மாறுட ணுகிநீவந்
தூன்ருள்கள் ளித்தனை பெற்றுமொன் றும்பெருரி

னின்றேனல தைம்புல னென்வச நின்றதில்லை
யின்றோதவற் றைக்கொலு பாயமொன் றீசவெற்கே.(16)

(இ - ள்) ஈச - பரமேசனே, அன்றே - முற் காலத்திலே, தமியேற்கு - அடியேனுக்கு, எளி - சுலபமான, மாநுடன் ஆகி - மநுஷ்யனாய், நீ - தேவரீர், வந்து - (எழுந்தருளி)வந்து, உன் - தேவரீரது, தாள்கள் - திரு வடிகளை, அளித்தனை - கொடுத்தீர், பெற்றும் - (தேவரீரது திரு வடியை) அடைந்தும், ஒன்றும் - ஒரு பிரயோஜனமும், பெறாரின் - அடையாதவரைப் போல, நின்றேன் - இருக்கின்றேனே, அலது - அன்றி, ஐம்புலன் - பஞ்சேந்திரியங்களும், என் - அடியேனது, வசம் - வசத்தில், நின்றது - இருந்தது, இல்லை - இல்லை, அவற்றை - (அதனால்) அவற்றினை, கொல் - நாசம் செய்யும்படியான, ஒன்று - ஒரு, உபாயம் - உபாயத்தினை, எற்கு - அடியேனுக்கு, இன்று - இப்பொழுது, ஓது - கூறுவீராக. எ - று. ஏ - அசை.

எற்கோவுன தன்புமனத்தில்லை யென்றனெஞ்சங்
கற்கேநிக ராயதிக் கல்லைநீ கல்லைவில்லா
முற்கால்வளைத் தாங்குவ ளைத்தன்பின் மூழ்குவிப்பாய்
சிற்கோலசி தம்பர நாயக தேவதேவே. (17)

(இ - ள்) சிற் கோல - சிற்சொரூபரே, சிதம்பர நாயக - சிதாகாசத் தலைவரே, தேவ தேவே - தேவ தேவனாகிய ஸ்வாமின், எற்கோ - எனக்கோ, உனது - உன்னிடத்து, அன்பு - பக்தி, மனத்து - மனத்தின்கண், இலை - இல்லை, என் - அடியேனது, நெஞ்சம் - மனம், கற்கே நிகர் ஆயது - கல்லுக்குச் சமானமாய் இருக்கின்றது, முற்கால் - முன் ஒரு காலத்தில், நீ - தேவரீர், கல்லை - (மகாமேரு) கிரியை, வில்லா - தநுஷாக, வளைத்து ஆங்கு - வளைத்தது போல, இக் கல்லை - இந்தக் கல்லாகிய மனதை, வளைத்து - வளையும்படி செய்து, அன்பின் - பக்தியினிடத்து, மூழ்குவிப்பாய் - முழுகும்படி செய்வீராக. எ - று. தன் - அசை.

தேவேயுனை யன்பினிற் பூசைசெய் தேனுமல்லே
னாவான் மிகப் பாடிநின் றாடிந யக்குகில்லே
னோவா துழ றீமநத் தோடிவ ணுற்றுளேன்மற்
றுவாவினி யென்வரு மென்பத றிந்திலேனே. (18)

(இ - ள்) தேவே - தேவ தேவனாகிய ஸ்வாமிந், உனை - தேவரீரை, அன்பினின் - பக்தியோடு, பூசைசெய்தேனும் - பூசிக்கவும், அல்லேன் - இல்லை, நாவால் - நாக்கினால், மிக - நன்றாக, பாடி - துதித்து, நின்று - (தேவரீரது சந்நதியில்) நின்று, ஆடி - (ஆநந்தத் தாண்டவம்)செய்து, நயக்கு கில்லேன்-விருப்பம் உண்டாக்க வில்லை, இவண் - இவ்விடத்து, ஓவாது - இடையறாது, உழல் - (விஷயங்களில்) சுழன்று திரிகின்ற, தீ - கெட்ட, மநத்தோடு - மநதோடு, உற்றுளேன் - பொருந்தியிருக்கின்றேன், ஆ ஆ - ஆச்சரியம் ஆச்சரியம், இனி - மேல், என் - யாது, வரும் - வரும், என்பது - என்பதை, அறிந்திலேன் - (யான்) உணரா வில்லை. ஏ - று. மற்று ஏ - அசை.

அறியாமையிற் கீழவர் பல்பிழை யாற்றினாலுங்
குறியாதருள் செய்வது மேலவர் கொள்கையன்றே
மறியார்காத் தோய்சிறி யேன்வினை மாற்றியாளப்
பொறியேயுனக் கென்முக மன்சொலப் பொய்யனேனே.

(இ - ள்) மறி - மானை, ஆர் - பொருந்திய, கரத்தோய் - கையினையுடைய ஸ்வாமிந், அறியாமையின் - அஞ்ஞாநத்தினால், கீழவர் - தாழ்ந்தோர், பல் - பல, பிழை - தவறுதல்களை, ஆற்றினாலும் - செய்தாலும், குறியாது - (அதனைப்) பொருட்படுத்தாது, அருள் செய்வது - அநுக்கிரகம் செய்வது, மேலவர் -- உயர்ந்தோர்களது, கொள்கை - சம்மதம், அன்றே - அல்லவா, பொய்யனேன் - (அதனால்) பொய் கூறும் யான், உனக்கு - தேவரீருக்கு, என் முகமன் சொல - என்ன உபசார வார்த்தை சொல்ல இருக்கின்றது, சிறி

யேன் - அடியேனது, வினை - கர்மங்களை, மாற்றி - நிவிர்த்தித்து, ஆள - தடுத்தாட் கொள்ளுதற்கு, பொறியேல் -- கோபியாதிருப்பீராக. எ - று. ஏ-அசை. பொரியேல் என்பது பொறியேல் என எதுகை நோக்கி நின்றது.

பொய்யற்றவர் வந்தடை யும்பரி பூரணவிம்
மெய்யற்றவெற் குனை லாலனிலை வேறுமுண்டோ
தையற்கிட மேயிட மாவரு டாணுவேவென்
மையற்றவிர்ப் பானுன்க டாக்ஷம்வ ழங்கிடாயே. (20)

(இ - ள்) பொய் அற்றவர் - யதார்த்த சொரூபத்தினை அடைந்தோர், வந்து - வந்து, அடையும் - அடைகின்ற, பரிபூரண - பரிபூரண சொரூபரே, தையற்கு - அம்பாளுக்கு, இடமே - வாம பாகமே, இடமா - ஸ்தானமாக, அருள் - அநுக்கிரகம் செய்த, தாணுவே - ஸ்தம்ப சொரூபரே, இம் - இந்த, மெய் அற்ற - பொய்ப் பொருளைக் கொண்டிருக்கப்பட்ட, எற்கு - அடியேனுக்கு, நின் - தேவரீரை, அலால் - அன்றி, வேறும் - வேறு, நிலை - இடம், உண்டோ - இருக்கின்றதா (இல்லை என்றபடி), என் - அடியேனது, மையல் - மயக்கத்தினை, தவிர்ப்பான் - நிவிர்த்தித்தற் பொருட்டு, உன் - தேவரீரது, கடாக்ஷம் - க்ருபா வீக்ஷண்ய லேசத்தினை, வழங்கிடாய் - கொடுப்பீராக. எ - று. ஏ - அசை.

வழங்கெற்கிவ ணேதுசெய் தாலெது வாகுமென்றென்
றெழுங்கற்பனை யாவுமி றந்துணர் வேகமேயா
யொழுங்கிற்புல னுதியு பாதியொ ழித்தொருன்னைச்
செழுங்கைக்கனி யொத்துண ரும்படி தில்லையானே.(21)

(இ - ள்) தில்லையானே - தில்லைப்பதியின்கண் எழுந்தருளியிருக்கப்பட்ட ஸ்வாமிந், இவண் - இவ்விடத்து, எது - யாது, செய்தால் - செய்யின், எது - யாது, ஆகும் - ஆம், என்று என்று - என

என, எழும் - உண்டாகின்ற, யாவும் கற்பனை - சகல கற்பனைகளும், இறந்து-நசித்து, உணர்வு - ஞானம், ஏகம் ஆய் - ஒன்றாய், ஒழுங்கின் - (சாஸ்திரத்திற் கூறிய) கிரமமாக, புலன் ஆதி - இந்திரியம் முதலிய, உபாதி - உபாதிகளை, ஒழித்து - நிவிர்த்தித்து, ஒரு - ஒரு, உன்னை - தேவரீரை, செழும் - செழுமையான, கை - கையின்கண் உள்ள, கனி - (நெல்லிப்) பழத்திற்கு, ஒத்து - சமானமாக, உணரும் படி - (பிரத்தியக்ஷமாக) அறியும் ஆறு, எற்கு - அடியேனுக்கு, வழங்கு - உபதேசிப்பீராக. எ - று. ஏ-அசை.

தில்லைப்பதி மேயசி வப்பிர காசனேயோ
தொல்லைப்பிற வாநெறி மேவிய தோன்றலேயோ
வல்லற்பிற விக்கிளைத் தேன்றனை யஞ்சலென்றோர்
சொல்லைப்பக ராய்விடை மீதினந் தோன்றிநின்றே (22)

(இ - ள்) தில்லைப் பதி - தில்லை நகரின்கண், மேய - பொருந்தியிருக்கப்பட்ட, சிவப்பிரகாசனே - சிவப்பிரகாசன் என்னும் பெயரோடு கூடிய பரசிவனே, தொல்லை - அநாதியாகவே, பிறவா - ஜநந மரணம் அற்ற, நெறி - மார்க்கத்தினை, மேவிய - பொருந்திய, தோன்றலே - அரசனாகிய பரசிவமே, இனம் - இன்னும், விடை மீது - ரிஷப வாகநத்தின் மீது, தோன்றி நின்று - எழுந்தருளி வந்து, அல்லல் - துன்ப ரூபமா யுள்ள, பிறவிக்கு - ஜநந மரணத்திற்கு, இளைத்தேன்றனை - வருந்தியிருக்கப்பட்ட என்னை (ப்பார்த்து), அஞ்சல் - பயப்படற்க, என்று - என, ஓர்-ஒரு, சொல்லை-வார்த்தையினை, பகராய்-கூறுவீராக. எ - று. ஓ ஓ ஏ-அசை.

தோன்றாத்துணை யேபுணை யேபவத் தொல்கடற்கென்
போன்றாற்குமி ரங்கும ருட்பெரும் போதமேயிங்
கின்றார்மனை யாதிய மோகமெ லாம்விடுத்துச்
சான்றாமுனை யேவினை யேனினிச் சாரவெண்ணே. (23)

(இ - ள்) தோன்ரு துணையே - மறைந்திருக்கப்பட்ட சகாயரே, தொல் - அநாதியாய் உள்ள, பவ கடற்கு - ஜந்ம சமுத்திரத்திற்கு, புணையே - ஓடம் போன்றவரே, என் போன்ருற்கும் - என்னைப் போன்ற பாவிகளுக்கும், இரங்கும் - இரக்கம் வைக்கின்ற, பெரும் அருள் போதமே - பெரிய ஜீவகாருண்ய ஞாந சொரூபரே, இங்கு - இவ்விடத்து, வினையேன் - பாவியாகிய யான், இனி -மேல், ஈன்ருர் - மாதா பிதா, மனை - பெண்சாதி, ஆதிய - முதலியவற்றிலுள்ள, மோகம் - மோகங்கள், எலாம் - யாவற்றையும், விடுத்து - விட்டு, உள் - இருதயத்தின்கண், சான்று ஆம் - சாக்ஷியாக விளங்கிக் கொண்டிருக்கும், உனையே - தேவரீரையே, சார - அடையும்படியாக, எண்ணு - கருதுவீராக. எ - று. ஏ-அசை.

சார்ந்தாய்குரு வாதிய வாய்விடை தன்னில்வந்தாய்
கூர்ந்தாயரு ளிற்பிற வாநெறி கூட்டுவித்தா
யோர்ந்தேன்குறை யின்றெனி னுங்குறை யுண்டுகண்டாய்
பேர்ந்தோடுமெ னெஞ்சுளுநன் னன்புபி றக்குமட்டே. ()

(இ-ள்) குரு ஆதிய ஆய் - குரு லிங்க சங்கமமாக, சார்ந்தாய் - (தேவரீர்) பொருந்தி யிருந்தீர், விடை தன்னில் - ரிஷப வாகநத்தில், வந்தாய் - (எழுந்தருளி) வந்தீர், அருளின் - அருளினுல், கூர்ந்தாய் - மிகுதியும் உபதேசித்தீர், பிறவா - ஜநந மரணம் அற்ற, நெறி - மார்க்கத்தினை, கூட்டுவித்தாய் - அடைவித்தீர், ஓர்ந்தேன் - (இவற்றினை) எல்லாம் யான் உணர்ந்தேன், குறை - (அதனுல்) ஒரு குறையும், இன்று - இல்லை, எனின் - ஆயினும், பேர்ந்தோடும் - (திரு வடிக்கண் இல்லாது விஷயங்களிடத்துச்) செல்லுகின்ற, என் - எனது, நெஞ்சுள் - மநத்தின்கண், உன் - தேவரீரிடத்து, அன்பு - பக்தி, பிறக்கும் மட்டு - உண்டாகும் வரை, குறை - குறை, உண்டு - இருக்கின்றது. எ-று. ஏ-அசை. கண்டாய் முன்னிலை அசைச் சொல்.

பிறவாநெறி யாகிய தோர்திருப் பேரையாவெம்
முறவேயற வேதவிர்ந் தென்மன மோடிவாடிப்
புறவாதனை பற்றிவ ளர்ந்திடு புன்மையாலின்
றிறவேயத னைப்புரி வானுளத் தெண்ணுவாயே. (25)

(இ-ள்) பிறவா - ஜநந மரணம் அற்ற, நெறி ஆகியது - மார்க்கம் ஆகிய, ஓர் - ஒப்பற்ற, திரு பேர் ஐயா - அழகிய பேரை ஊரின் கண் எழுந்தருளி யிருக்கிற ஸ்வாமிந், எம் - எமது, உறவே - பந்துவே, என் - அடியேனது, மநம் - மநம், அறவே - (திரு வடிக்கண் இல்லாது) அத்தியந்தம், தவிர்ந்து - நீங்கி, ஓடி - (விஷயங்களிற்) சென்று, வாடி - வாட்டத்தினை அடைந்து, புற வாதனை - பாகிய வாசனையை, பற்றி - பொருந்தி, வளர்ந்திடு - விருத்தி அடைகின்ற, புன்மையால் - இழிந்த தன்மையினால், இன்று - (திரு வடியை அடைந்தது) இல்லை, அதனை - அந்த மநத்தினை, இறவே - நாசம் அடையும்படியாக, புரிவான் - செய்யும்பொருட்டு, உளத்து - மநத்தின்கண், எண்ணுவாய் - நினைப்பீராக. எ-று. ஏ-அசை.

எண்ணும்வடி வேதினி நீபுனைந் தெய்தினாலுந்
திண்ணம்மென வாவக லாவச்சி தம்பரத்தே
நண்ணுமுன துண்மையைக் காணந யந்துளேனென்
னுண்ணின்றதைக் காட்டுதற் கீசசற் றுன்னுவாயே.(26)

(இ-ள்) ஈச - பரசிவனே, இனி - மேல், எண்ணும் - கருதத் தகுந்த, ஏது - எந்த, வடிவு - மூர்த்தங்களை, நீ - தேவரீர், புனைந்து - பொருந்தி, எய்தினாலும் - வரினும், என் - எனது, அவாவு - ஆசையானது, அச் சிதம்பரத்தே - அந்தச் சிதம்பரத்தை விட்டு, அகலா - நீங்காது, திண்ணம் - (இஃது) நிச்சயமாம், நண்ணும் - பொருந்தா நின்ற, உனது - தேவரீரது, உண்மையை - எதார்த்த சொரூபத்தினை, காண - தெரிசிக்க, நயந்துளேன் - விரும்பி இருக்கின்றேன், என் - அடியேனது, உள் - இருதயத்தின்கண், நின்று - இருந்து

அதை - அந்தத் தேவரீரது எதார்த்த சொரூபத்தை, காட்டுதற்கு - தெரிசிப்பித்தற்கு, சற்று - கொஞ்சம், உன்னுவாய் - (மநத்தின்கண்) நினைப்பீராக. எ-று. ஏ-அசை.

உன்னும்முணர் வுக்குணர் வாயெனக் குண்மைதந்தாய்
மன்னுஞ்சுரு திப்பொரு ளாய்வழி காட்டிநின்றாய்
பின்னுங்குரு வாயடைந் துன்னருள் பேணவைத்தா
யென்னென்றுரைப் பேனின்கருணையிருந்தவாறே.(27)

(இ-ள்) உன்னும் - கருதத் தகுந்த, உணர்வுக்கு - ஞாநத்திற்கும், உணர்வாய் - ஞாந ரூபமா யிருந்து, எனக்கு - அடியேனுக்கு, உண்மை - யதார்த்த சொரூபத்தினை, தந்தாய் - (தேவரீர்) கொடுத்தீர், மன்னும் - நிலைபெற்ற, சுருதி பொருளாய் - வேதார்த்தமாய் (இருந்து), வழி - மார்க்கத்தினை, காட்டி நின்றாய் - அறிவித்தீர், பின்னும் - பின்னரும், குரு ஆய் - குரு ரூபமாக எழுந்தருளி வந்து, அடைந்து - (உம்மைச் சரணாகதியாக) அடைந்து, உன் - தேவரீரது, அருள் - கிருபையினை, பேண - விரும்பும்படியாக, வைத்தாய் - செய்தீர், நின் - தேவரீரது, கருணை - கிருபை, இருந்த - (அடியேன்மீது) இருந்த, ஆறு - தன்மையை, என் - எப்படி, என்று - என, உரைப்பேன் - கூறுவேன் (கூறமுடியாது என்பது கருத்தாம்). எ-று. ஏ-அசை. இது சுருதி குரு ஸ்வாநுபூதி ரூபமாய் ஈசன் இருந்ததனைக் கூறிற்று.

இருந்தோருமி டத்துணர் வில்லைமா யைக்கிதன்பாற்
பொருந்தாவிடத் தில்லையு யிர்க்கொரு போதமேனுந்
திருந்தாவினை கொண்டிறை யைந்தொழில் செய்தியென்றே
வருந்தாவருண் முன்னிலை தன்னைம தித்தியானே. (28)

(இ-ள்) இருந்து - (ஏகாந்த ஸ்தாநத்தில்) இருந்து, ஓரும் இடத்து - விசாரிக்கும் காலத்து, மாயைக்கு - மாயைக்கு, உணர்வு -

ஞானம், இல்லை - இல்லையாம், இதன் பால் - இந்த மாயையினிடத்து, பொருந்தா விடத்து - சேரா திருக்கின், உயிர்க்கு - ஆத்மாவிற்கு, ஒரு போத மேனும் - ஒரு வித ஞானமாயினும், இல்லை - இல்லையாம், திருந்தா - சிறந்த, இவை - இவ்விரண்டினையும், கொண்டு-கொண்டு, இறை - பரமேஸ்வரனாகிய நீர், ஐந் தொழில் - பஞ்ச கிர்த்தியங்கள், செய்தி - செய்கின்றீர், என்று - எனக் கருதி, முன்னிலை தன்னை - (துக்கத்திற்கு) முன்னிலையாயுள்ள சீவர்களை, மதித்து - குறித்து, யான் - நான், வருந்தா - வருத்தம் அடையாதிருக்கும்படியாக, அருள் - அநுக்கிரகம் செய்வீராக. எ-று. ஏ ஏ-அசை.

மதித்தென்பரு வத்தள விற்குரு வாதியாகி
யுதித்துள்ளறி வோங்கும்வ கைக்குபா யஞ்செய்தோயை
யெதிர்த்திங்ஙனஞ் சற்குரு சற்குரு வென்றுநைந்துந்
துதித்துந்திரி யாவெனக் கின்னரு டந்துதோன்றே.(29)

(இ-ள்) என் பருவத்து அளவில் - அடியேனது பக்குவத்துக்குத் தக்க வாறு, மதித்து - நிச்சயித்து, குரு ஆதி ஆகி - குரு லிங்க சங்கம ரூப மாகி, உதித்து - தோன்றி, உள் - மநத்தின்கண், அறிவு - ஞானமானது, ஓங்கும் வகைக்கு - விருத்தி ஆகும்படியாக, உபாயம் செய்தோயை - உபாயம் செய்த தேவரீரை, எதிர்த்து - சந்தித்து, இங்ஙனம் - இவ்வாறு, சற் குரு - நல்லாசிரியர், சற் குரு - நல்லாசிரியர், என்று - எனக் கூறி, நைந்தும் - (மநம்) நைவடைந்தும், துதித்தும் - (வாக்கினால்) துதித்தும், திரியா - திரியாத, எனக்கு - அடியேனுக்கு, இன் - (தேவரீரது) இனிய, அருள் - அருளினை, தந்து - கொடுத்து, தோன்று - தோன்றுவீராக. எ-று. ஏ-அசை.

தோன்றுமன்மு னிந்தொரு தாய்வயிற் றோன்றுபால
ரீன்றுடனைத் தம்பின்வே றுக்கொடி கழ்ந்தவாபோற்
பூன்றுவொரு நீயரு ளாற்புணை மேனியெல்லாம்
யான்றன்பல தெய்வமெ னக்கொடி கழ்ந்தவாறே. (30)

(இ-ள்) ஒரு - ஒரே, தாய்வயின்-மாதாவினிடத்து, தோன்று - ஜநித்த, பாலர் - அநேகம் குழந்தைகள், தோன்றாமல் - (நாம் எல்லோரும் ஒரே மாதாவிடத்துச் ஜெநித்திருக்கின்றோம் என்னும் ஞாநம்) உண்டாகாமல், முனிந்து - (பரஸ்பரம்) கோபித்து, ஈன்றாள் தனை - (தன்) தாயை, தம்மின் - தம்மைப் பார்க்கிலும், வேறு - அந்நியமாக, கொடு - கொண்டு, இகழ்ந்த - நிந்தித்த, ஆ(று) - தன்மை, போல் - போல, பூன்றா - பரிபூரணமாய் உள்ள, ஒரு - ஒப்பற்ற, நீ - தேவரீர், அருளால் - கிருபையினால், புனை - பொருந்திய, மேனி - மூர்த்தங்கள், எல்லாம் - யாவற்றையும், யான் - நான், பல - அநேக, தெய்வம் - தேவதைகளாம், என - என்று, கொடு - கொண்டு, இகழ்ந்த - நிந்தித்த, ஆறு - தன்மையாம். எ-று. தான் ஏ-அசை.

இகழும்பொரு ளொன்றிலை மண்முத லெட்டுமெந்தாய்
நிகழுன்வடி வேயெனத் தேர்ந்துள நெக்குநின்றாட்
புகழும்படி யேயினி யீசவென் புத்திதன்னைத்
திகழும்படி செய்திதி ரோபவஞ் செய்திடேலே. (31)

(இ-ள்) எந்தாய் - எமது தந்தையாகிய ஸ்வாமிந், ஈச - ஈஸனே, இகழும் - நிந்திக்கத் தக்க, பொருள் - வஸ்துக்கள், ஒன்று - ஒன்றும், இலை - இல்லை யாம், மண் முதல் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் சூரியன் சந்திரன் சீவன் ஆகிய, எட்டும் - அஷ்ட மங்கல மூர்த்தங்களும், நிகழ் - விளங்காநின்ற, உன் - தேவரீரது, வடிவே - சொரூபங்களே, என - என்று, தேர்ந்து - தெளிந்து, உளம் - மநம், நெக்கு - நெகிழ்ந்து, நின் - தேவரீரது, தாள் - திருவடித் தாமரைகளை, புகழும் படியே - தோத்திரம் செய்யும்படியாக, இனி - மேல், என் - அடியேனது, புத்தி தன்னை - புத்திக்கு, திகழும்படி - விளங்கும்படி, செய்தி - செய்விப்பீராக, திரோபவம் - மறைப்பினை, செய்திடேல் - செய்யா திருப்பீராக. எ-று. ஏ-அசை புத்தி தன்னை என்பதில் தன் அசை.

செய்யாய்கரி யான்றொழும் வெள்ளிளஞ் சேவையூர்வோய்
வையார்மழு வோய்திரு வுள்ளமிவ் வஞ்சனேனு
மையாவிழி பெய்வுற நீர்பெரி தன்பினோடு
கையாற்றொழு தேத்திநின் கூத்தினைக் காணுமாறே. (32)

(இ-ள்) கரியான் - மகாவிஷ்ணுவினால், தொழும் - தொழப்பட்ட, வெள் - வெண்மையான, இளம் - யௌவனத்தினை யுடைய, சேவை - ரிஷபத்தில், ஊர்வோய் - எழுந்தருளி வரப்பட்ட ஸ்வாமின், வை - கூர்மை, ஆர் - பொருந்தி யிருக்கப்பட்ட, மழுவோய் - மழுவாயுதத்தினையுடைய சுவாமின், ஐயா - பிதாவே, இவ் வஞ்சனேனும் - இந்த வஞ்சகத் தன்மையினை யுடைய யானும், பெரிது - மிகுந்த, அன்பினோடு - புக்தியோடு, விழி - நேத்திரத்தினின்றும், நீர்-ஜலம், பெய்வுற - கொட்டும் படியாக, கையால் - அஸ்தத்தினால், தொழுது - நமஸ்கரித்து, எத்தி - (வாக்கினால்) துதித்து, நின் - தேவரீரது, கூத்தினை - (ஆநந்தத்) தாண்டவத்தினை, காணும் ஆறு - தெரிசிக்கும்படியாக, திரு உள்ளம் செய்யாய் - மநத்தின்கண் நினைப்பீராக, எ-று. ஏ-அசை.

காணாதபவக்கட லின்கரை காணவெற்குக்
கோணாகணி மார்பமெய் யன்புகொ டுத்தியென்றே
நாணாதிசைத் தேன்றிருக் காளத்தி நாதவுன்றாட்
பேணாதவ லக்கடன் மூழ்கிய பேதையேனே. (33)

(இ-ள்) கோள் - நக்ஷத்திரம்(போலும் பிரகாசம் பொருந்திய), நாகு - சர்ப்பத்தினை, அணி - ஆபரணமாகப் பூண்டிருக்கப்பட்ட, மார்ப - மார்பினை யுடைய ஸ்வாமின், திருக்காளத்தி நாத - ஸ்ரீ காளஹஸ்தியில் எழுந்தருளி யிருக்கப்பட்ட ஸ்வாமின், காணாத - (ஒருவராலும்) அறிய முடியாத, பவ - ஜநந (மரண), கடலின் - சமுத்திரத்தின், கரை - தீரத்தினை, காண - அறியும்படியாக, எற்கு - அடியேனுக்கு, மெய் - உண்மையான, அன்பு - பக்தியினை, கொடுத்தி - (தேவரீர்) கொடுத்திருக்கின்றீர்,

என்று - என, உன் - தேவரீரது, தாள் - திருவடிகளை, பேணாது - விசுவாசிக்காது, அவல - துக்கரூபமான, கடல் - (சமுசார) சமுத்திரத்தில், மூழ்கிய - முழுகிக்கிடக்கின்ற, பேதையேன் - பேதமையோடு கூடிய யான், நாணாது - வெட்கமின்றி, இசைத்தேன் - (பலரறியக்) கூறினேன். எ-று. ஏ-அசை.

பேதைக்கொரு பாகம ளித்திடு பேரையாவெங்
கோதைக்குநின் றோளுறு கோதைகொ டென்றுநின்பா
லோதற்கென துளத்தைவி டுத்தன னோடிமாதர்
காதற்களை யுண்டமை யாலுனைக் கண்டதின்றே. (34)

(இ-ள்) பேதைக்கு - அம்பாளுக்கு, ஒரு பாகம் - பாதி சரீரத்தை, அளித்திடு - கொடுத்த, பேர் ஐயா - பேரை ஊரின்கண் எழுந்தருளி யிருக்கின்ற சுவாமிந், எம் - எமது, கோதைக்கு - பெண்ணுக்கு, நின் - தேவரீரது, தோள் - தோளின்கண், உறு - பொருந்தி யிருக்கப்பட்ட, கோதை - புஷ்ப மாலையினை, கொடு - கொடுப்பீராக, என்று - என, நின்பால் - தேவரீரிடத்தில், ஓதற்கு - சொல்லுதற்கு, என் - அடியேனது, உளத்தை - மனத்தினை, விடுத்தனன் - (தூதாக) அனுப்பி யிருந்தேன், ஓடி - (அந்த மனம்) சென்று, மாதர் - பெண்களது, காதல் - ஆசையாகிய, களை - கள்ளை, உண்டமையால் -(பூரணமாகக்) குடித்தபடியால், உனை - தேவரீரை, கண்டது - பார்த்ததே, இன்று - இல்லை. எ-று. ஏ-அசை. இது நாயகன் அநுக்கிரகத்தினைப் பெற மனத்தினைத் தூதாக அநுப்ப அம் மனம் இடையில் மாதர் ஆசையால் இடையூறு அடைந்ததனை நாயகி நாயகனிடம் விண்ணப்பித்தல்.

கண்டேன்களி கூர்ந்துசி வப்பிர காசநாமங்
கொண்டோங்குரு வோடிவ ணுற்றெனை யாண்டகோவே
பண்டேயொரு நீவகுத் திட்டப டிக்கியானுன்
றொண்டாகிவந் தின்றுனைப் பாடத்தொ டங்கினேனே.()

(இ-ள்) சிவப்பிரகாச - சிவப்பிரகாசன் (என்னும்), நாமம் - பெயரினை, கொண்டு - (தரித்துக்) கொண்டு, ஓங்கு - பெரிய, உருவோடு - ஆகிருதியோடு, இவண் - இவ்விடத்து, உற்று - எழுந்தருளி வந்து, எனை - அடியேனை, ஆண்ட - ஆட்கொண்ட, கோவே - எஜமானனே, களி கூர்ந்து - மிகுந்த சந்தோஷத்தோடு, கண்டேன் - தேவரீரைத் தரிசித்தேன், ஒரு - ஒரு, நீ - தேவரீர், பண்டே - பூர்வமே, வகுத்திட்ட படிக்கு - பிரித்து நியமித்த பிரகாரம், யான்-நான், உன் - தேவரீரது, தொண்டு - தொண்டன், ஆகி - ஆய், வந்து - வந்து, இன்று - இப்பொழுது, உனை - தேவரீரை, பாட - துதித்தற்கு, தொடங்கினேன் - ஆரம்பித்திருக்கின்றேன். எ-று. ஏ-அசை.

தொடக்காயெனைச் சூழ்ந்துள வைம்புலத் தோற்றமெல்லாங்
கெடக்கூறுதி நீயொரு சூக்ஷிகி ளக்கிலாயே
லடக்காவவை யென்றன கத்துள டங்குகாறுங்
கடக்கேன்பவ வேலையெவ் வண்ணமுக் கண்ணினானே ()

(இ-ள்) முக் கண்ணினானே - திரிநேத்திரங்களை யுடைய ஸ்வாமின், தொடக்காய் - அநாதி சம்பந்தமாக, எனை -அடியேனை, சூழ்ந்து - சூழ்ந்து, உள - இருக்கப்பட்ட, ஐம் புல தோற்றம் - பஞ்ச இந்திரியப் பிரதீதி, எல்லாம் - யாவும், கெட - நாசமாகும்படியாக, கூறுதி - (தேவரீர் ஒரு உபாயம்) கூறவீராக, நீ - தேவரீர், ஒரு-ஒரு, சூக்ஷி - உபாயம், கிளக்கிலாயேல் - கூறாதிருப்பீராகில், அவை - அந்தப் பஞ்சேந்திரியங்களும், அடக்கா - அடங்காவாம், என் - அடியேனது, அகத்துள் - மநத்தின்கண், அடங்கு காறும் - (அந்தப் பஞ்ச இந்திரியங்களும்) அடங்குகிற பரியந்தமும், எவ் வண்ணம் - எங்ஙன மாயினும், பவ வேலை-ஜநந (மரண) சமுத்திரத்தினை, கடக்கேன்-தாண்ட முடியாதவனாக இருக்கின்றேன். எ-று. தன்-அசை. அடங்கா என மெலித்தல் வலித்தல் ஆய்ப் பிறவினை ஆயிற்று.

கண்ணுன்மத னைப்பொடி யாய்வகை கண்டவெண்டோ
ளண்ணுவுயிர் யாவும ளித்திடு மப்பனேயோ

தண்ணார்பொழிற் றில்லையு ளாயெனக் கீதுதாராய்
மண்ணாதிய வாசைக ளற்றுனை வாழ்த்துமாறே (37)

(இ-ள்) கண்ணால் - (நெற்றிக்) கண்ணினால், மதனை - மன்மதனை, பொடி ஆம் வகை - பஸ்பம் ஆகும் படியாக, கண்ட-பார்த்த, எண் தோள் - அஷ்ட புஜங்களை யுடைய, அண்ணா - பரசிவமே, யாவும் - சகல, உயிர் - ஜீவர்களையும், அளித்திடும் - ரக்ஷிக்கின்ற, அப்பனே - பிதாவே, தண் - குளிர்ச்சி, ஆர் - பொருந்தி யிருக்கப் பட்ட, பொழில் - சோலைகள் (சூழ்ந்த), தில்லை உளாய் - சிதம்பர க்ஷேத்திரத்தின்கண் எழுந்தருளி யிருக்கப்பட்ட ஸ்வாமிந், எனக்கு - அடியேனுக்கு, மண்-பூமி, ஆதிய-பெண் பொன் என்பவற்றி லுள்ள, ஆசைகள் - விருப்பங்கள், அற்று - நீங்கி, உனை - தேவரீரை, வாழ்த்தும் ஆறு - துதிக்கும்படியாக, ஈது-இது ஒன்று மாத்திரம், தாராய் - தருவீராக. எ-று. ஒ ஏ-அசை.

வாழ்த்தேனுனை நாடொறும் வாழ்த்தவல் லோர்கடாளிற்
றாழ்த்தேன்றலை யாங்கவ ரேவற லைக்கொள்கில்லேன்
வீழ்த்தேனெடுங் காலம வத்திலொண் மேருவில்லோய்
பாழ்த்தேன்கிளி போற்பல நூல்கள்ப டித்துமியானே.()

(இ-ள்) ஒண் - பிரகாசம் பொருந்திய, மேரு - மகாமேரு கிரியை, வில்லோய் - தநுஷாக வுடைய ஸ்வாமிந், உனை - தேவரீரை, நாள் தொறும் - பிரதி தினமும், வாழ்த்தேன் - தோத்திரம் செய்திலேன், வாழ்த்த - தோத்திரம் செய்ய, வல்லோர்கள் - சாமர்த்தியம் உள்ள பெரியோர்களது, தாளில் - திரு வடிகளில், தலை - சிரசை, தாழ்த்தேன் - விழும்படி செய்திலேன், அவர் - அப் பெரியாரது, ஏவல் - பணிகளை, தலைக் கொள்கில்லேன் - செய்திலேன், நெடுங் காலம் - நீண்ட நாளாக, அவத்தில் - வீணாக, வீழ்த்தேன் - காலம் கழித்தேன், கிளி போல் - கிளியைப் போல, யான் - நான், பல நூல்கள் படித்தும் - பல சாஸ்திரங்களைப் படித்து, பாழ்த்தேன் - பாழாய்ப் போனேன். எ-று. ஆங்கு-தலை ஏ-அசை.

யானுருடற் கின்பதுன் பங்களை யெண்ணவெண்ணித்
தானேசிறு பாலரி னென்மனஞ் சஞ்சலிக்கு
மீனாயினன் பாலல தென்கண்விடுத்திகொல்லோ
வானேறுடை யாய்திதி யாமதி காரநீயே. (39)

(இ-ள்) ஆன் ஏறு உடையாய் - ரிஷப வாகனாரூடராகிய ஸ்வாமிந், உடற்கு - சரீரத்திற் குள்ள, இன்ப துன்பங்களை - சுக துக்கங்களை, எண்ண - கருதுதற்கு, யான் ஆர் - நான் எப்படிச் சக்தன் ஆவேன் (ஆகமாட்டேன் என்றபடி), எண்ணி - (அங்ஙனம் இருந்தும் சரீரத்தினது சுக துக்கங்களைக்) கருதி, சிறு பாலரின் - சிறிய குழந்தைகளைப் போல, என் - அடியேனது, மநம் - மநம், சஞ்சலிக்கும் - சஞ்சலத்தினை அடைகின்றது, திதி ஆம் - ரக்ஷிப்பு ஆகிய, அதிகாரம் - அதிகாரத்தினை, நீ - தேவரீர், மீன் ஆயினன் பால் - மத்சாவதாரத்தினை எடுத்த விஷ்ணுவினிடத்து, அலது - (கொடுத்திருக்கின்றீரே) அன்றி, என்கண் - என்னிடத்து, விடுத்தி கொல்லோ - விட்டுக் கொடுத்திருக்கின்றீரா (இல்லை என்றபடி). எ-று. ஏ ஏ தான் கொல்-அசை.

காரார்மிடற் றாயளி சூழ்தரு பொற்கடுக்கைத்
தாரார்புய னேசிவ காமசவுந்தரிக்கோர்
சீரார்மண வாளவென் றன்குல தெய்வமேநீ
பாராய்கடைக் கண்ணென தெண்ணம்ப லிக்கவின்றே. ()

(இ-ள்) கார் - நீலம், ஆர் - பொருந்தியிருக்கப்பட்ட, மிடற்றாய் - கண்டத்தினையுடைய சுவாமிந், அளி - வண்டுகள், சூழ்தரு - மொய்த்துக்கொண் டிருக்கின்ற, பொன் - பொன் போன்ற நிறத்தினை உடைய, கடுக்கை - கொன்றை(ப் புஷ்பத்தினால் செய்யப் பட்ட), தார் - மாலை, ஆர் - பொருந்தி யிருக்கின்ற, புயனே - புஜத்தினையுடைய ஸ்வாமிந், சிவ - சிவனுக்கு, காம - விருப்பத்தினை உண்டுபண்ணும் படியான, சவுந்தரிக்கு - அழகினையுடைய அம்பர்

ளுக்கு, ஓர் - ஒப்பற்ற, சீர் - சிறப்பு, ஆர் - பொருந்திய, மணவாள - கணவனே, என் - அடியேனது, குல தெய்வமே - குல தேவதையே, நீ - தேவரீர், இன்று - இப்பொழுது, எனது - அடியேனது, எண்ணம் - கருத்து, பலிக்க - முற்றுப் பெறும்படியாக, கடைக் கண் - கடாக்ஷ வீக்ஷண்யத்தினை, பாராய் - செய்வீராக. எ-று. தன் ஏ-அசை.

இன்றென்னைசெய் கேனென நாடியி ருந்ததீயேற்
கொன்றெய்தினெவ் வண்ணம றும்மதை யோதுவேனே
வன்றன்னமு மேனமு மோர்வரு மைய நின்று
ளொன்றன்பர்கு ழாத்துற வீதரு ளாயுவந்தே. (41)

(இ-ள்) அன்று - முற் காலத்து, அன்னமும் - (பிரம்மா) அன்ன ரூபமாகவும், ஏனமும் - (விஷ்ணு) வராக ரூபமாகவும் (தேடி), ஓர்வு அரும் - அறிதற் கரிய, ஐய - பிதாவே, இன்று - இப்பொழுது, என்னை - என்ன, செய்கேன் - செய்வேன், என - என்று, நாடி - கருதிக் கொண்டு, இருந்த - இருக்கப்பட்ட, தீயேற்கு - பாவியாகிய எனக்கு, ஒன்று - ஒரு உபாயம், எய்தின் - கிடைக்கும் ஆயின், எவ் வண்ணம் - எப்படி, அறும் - (தேகாபிமானம்) நாசத்தை அடையும், அதை - அந்த உபாயத்தினை, ஓதுவேன் சொல்லுவேன், நின் - தேவரீரது, தாள் - திரு வடித் தாமரை, ஒன்று - பொருந்தி யிருக்கப்பட்ட, அன்பர் - சாதுக்களது, குழாத்து - சங்கத்தின்கண், உற - சேர்ந்திருக்கும்படியாக, ஈது - இஃது ஒன்றை மாத்திரம், உவந்து - சந்தோஷித்து, அருளாய் - அநுக்கிரகம் செய்வீராக. எ-று. ஓ ஏ - அசை.

உவந்தாபெண் ணைம்புல னும்மிரீந் தோட்டவோர்நா
டவந்தான்சிறி துமிலி பால்விடை தன்னின்மின்னே
டிவர்ந்தேவரா நாளும்வி ளங்கிலை யென்னைகொல்லோ
லவந்தான்மிகு பாவியுன் லீலைய றிந்திலேனே. (42)

(இ-ள்) எனது - அடியேனது, ஐம்புலனும் - பஞ்சேந்திரியங்களும், இரிந்து ஓட - நாசம் அடையும்படியாக, ஓர் நாள் - முன்னொரு காலத்தில், தவம் - தவம், சிறிதும் - கொஞ்சமும், இலிபால் - இல்லாத என்னிடத்து, விடைதன்னில் - ரிஷபவாகநத்தின்மீது, மின்னோடு - அம்பிகையோடு, இவர்ந்தே-ஏறி, வர-வருதற்கு, நாளும்-பிரதி தினமும், உவந்தாய் - சந்தோஷம் உற்றிருந்தீர், விளங்கிலை - (இப்பொழுது நீர் எழுந்தருளி) வரவே இல்லை, என்னை கொல்லோ-யாது காரணமோ, அவம் - கெட்ட தொழில், மிகு - அதிகரித்திருக்கின்ற, பாவி - பாவியாகிய யான், உன் - தேவரீரது, லீலை - விளையாட்டினை, அறிந்திலேன் - உணர்ந்திலேன். எ-று. தான் தான் கொல் ஏ - அசை.

அறியாமையிற் கட்டுண லுற்றதென் னாண்மையத்தைப்
பிரியாதுவி டேனென லெந்தைபி ரானுணுண்மை
குறியீதிரு வர்க்குமென் றாலெனைக் கோபியேலே
செறிவாய்மல மேயிறை யோடிகல் செய்ததன்றே. (43)

(இ-ள்) எந்தை பிரான் - எமது தந்தையாகிய தலைவரே, அறியாமையின் - அறியாமையினால், என் - எனது, ஆண்மை - புருஷத்தன்மை, கட்டுணல் - கட்டுப்பட்டு, உற்றது - இருக்கின்றது, உன் - தேவரீரது, ஆண்மை - புருஷத்தன்மை, அத்தை-அந்த எனது புருஷத் தன்மையை, பிரியாது விடேன் - (அஞ்ஞானத்தினின்றும்) பிரிப்பேன், எனல் - என்பதாம், இருவர்க்கும் - (சீவேஸ்வரர்) இருவருக்கும், ஈது - இது, குறி - அடையாளம், என்றால் - ஆயின், எனை - அடியேனை, கோபியேல் - கோபியாதிருப்பீராக, இறையோடு - பரமேஸ்வரனோடு, செறிவு ஆய் - நெருங்கி இருக்கப்பட்ட, மலமே - அஞ்ஞானமே, இகல் செய்தது - விரோதித்தது. எ-று. ஏ அன்று ஏ அசை. "பிரியாது" என்றபாலது எதுகை நோக்கிப் பிறியாது என நின்றது எனினும் ஆம்.

செய்விப்பன்வி னைத்தொகை வெம்பவஞ் சேர்ப்பனுன்னை
யுய்விப்பனே லச்சிவ னாண்மையு மோர்வனென்றே
யைவர்க்கெதி ரேயெனை நோக்கிய றைந்ததையா
மைவெற்பன வாணவ நீயதை மாற்றிடாயே. (44)

(இ-ள்) ஐயா - சுவாமிந், வினைத் தொகை - கருமத் தொகுதி களை, செய்விப்பன் - செய்விப்பேன், வெம் - கொடிதாய் உள்ள, பவம் - சம்சாரத்தினை, சேர்ப்பன் - அடைவிப்பேன், உன்னை - (ஜீவனாகிய) உன்னை, உய்விப்பேனேல் - (கருமங்களினின்றும் சமுசாரத்தினின்றும்) விடுவிப்பனேல், அச் சிவன் - அந்தப் பரமசிவத்தினது, ஆண்மையும் - சாமர்த்தியத்தினையும், ஓர்வன் - (யான்) அறிவேன், என்று - என, மை - நீல, வெற்பு - அசலம், அன - போன்ற, ஆணவம் - அஞ்ஞானம் ஓர் - ஒப்பற்ற, ஐவர்க்கு - பஞ்சேந்திரியங்களுக்கு, எதிரே - முன்னிலையில், எனை - என்னை, நோக்கி - பார்த்து, அறைந்தது - கூறினது, நீ - (அதனால்) தேவரீர், அதை - அந்த அஞ்ஞானத்தை, மாற்றிடாய் - நிவிர்த்திப்பீராக. எ-று. ஏ - அசை.

மாற்றுயெனக் காணவ மாயையில் வந்துவந்தே
தோற்றுவுள கேவல மாதிய சுத்தமொன்றா
வேற்றுயவ ணேற்றியி ரண்டறுத் தெங்குமாகிக்
கூற்றுவிகொள் பதத்தென் னாவியுங் கொள்ளுவாயே. ()

(இ-ள்) மாயையில் - (சுத்த) மாயையில், வந்து வந்து - அடிக்கடி எழுந்தருளி வந்து, எனக்கு - அடியேனுக்கு, ஆணவம் - அஞ்ஞானத்தினையும், தோற்று உள - தோற்றிக்கொண்டிருக்கப்பட்ட, கேவலம் ஆதிய - சாக்கிரம் சொப்பனம் என்னும் சகலாவஸ்தையையும் சுழுப்தி என்னும் கேவல அவஸ்தையையும், மாற்றாய் - நிவிர்த்திப்பீராக, சுத்தம் ஒன்று ஊடு - (சகல கேவலமாகிய அசுத்தங்கள் நீங்கிய) சுத்தாவஸ்தையில், ஏற்றாய் - ஏற்றுவிப்பீராக, அவண் - அவ்விடத்து, ஏற்றி - ஏறும்படிசெய்து, இரண்டு - துவைதப் பிரதீதியை,

அறுத்து - நிவிர்த்தித்து, எங்கும் ஆகி - சர்வகதம் ஆய், கூற்று - எமனது, ஆவி - பிராணனை, கொள் - கொண்ட, பதத்து - திருவடியில், என் - அடியேனது, ஆவியும் - பிராணனையும், கொள்ளுவாய் - கொள்ளுவீராக. எ-று. ஏ ஏ அசை.

கொள்ளேனெனினு மெழுத் தைந்துமுட் கோதியாதுந்
தள்ளேனெனினு முனைச் சார்தவஞ் சார்ந்திலாரை
விள்ளேனெனினு மெனை நீகைவி டேல்விடேல்கா
ணள்ளாறுடை யாயவி நாசிந யந்துளானே. (46)

(இ-ள்) நள் ஆறு உடையாய் - திரு நள்ளாற்றினை யுடைய சுவாமிந், அவிநாசி - அவிநாசி (க்ஷேத்திரத்தை), நயந்து உளானே - விரும்பி யிருக்கப்பட்ட சுவாமிந், எழுத்து ஐந்தும் - பஞ்சாக்ஷரங்களையும், கொள்ளேன் - கொள்ளாதவன், எனினும் - ஆயினும், உள் - மனத்தின் கண் (உள்ள), கோது - குற்றங்கள், யாதும் - யாவற்றையும், தள்ளேன் - தள்ளாதவன், எனினும் - ஆயினும், உனை - தேவரீரை, சார் - அடையத் தகுந்த, தவம் - தவத்தினை, சார்ந்திலாரை-பொருந்தியிலாத பாவிகளை, விள்ளேன் - விட்டு நீங்காதவன், எனினும் - ஆயினும், எனை - அடியேனை, நீ - தேவரீர், கைவிடேல் - விட்டு விடாதீர், விடேல் - விட்டுவிடாதீர். எ-று. காண் முன்னிலை அசைச் சொல், ஏ அசை.

நயவாதுதில் லாபுரி யோயுனை நாடிநாளும்
வியவாதுட லோடுற வென்றும்விடா தென்னுள்ளஞ்
சயவாதுறு போகமெ லாமிவை கண்டுவீடும்
பயவாதிதென் றேபயந் தேன்மிகப் பாவியேனே. (47)

(இ-ள்) தில்லா புரியோய் - தில்லைப் பதியின்கண் எழுந்தருளியிருக்கப்பட்ட சுவாமிந், உனை - தேவரீரை, நாளும் - பிரதி தினமும், நாடி - தியானித்து, நயவாது - விரும்பி, வியவாது - துதிக்காது, உட

லோடு - சரீரத்தோடு (உள்ள), உறவு - சம்பந்தத்தை, என்றும் - எப்பொழுதும், விடாது - விட்டு நீங்காது, என் - அடியேனது, உள்ளம் - மநம், உறு - பொருந்தியிருக்கப்பட்ட, போகம் - போகங்கள், எலாம் - யாவற்றையும், கயவாது - வெறுக்காது, இவை-இவற்றினை, கண்டு - பார்த்து, வீடும் - மோக்ஷத்தினையும், இது - இந்த மநம், பயவாது - கொடுக்கமாட்டாது, என்று - எனக் கருதி, மிக பாவியேன் - மிகவும் பாவியாகிய யான், பயந்தேன்-பயந்திருக்கின்றேன். எ-று. ஏ ஏ-அசை.

பாவாற்பெரி யோர்புகழ் சிற்றம்ப லத்துளோயை
நாவாற்சிறி யேன்றுதி செய்யுமிந் நன்கில்சொல்லு
மோவாதிரை யோருழை தாவிய வுன்செவிக்கே
மேவாதல வென்றுது ணிந்துவி ளம்பினேனே. (48)

(இ-ள்) பாவால் - செய்யுளினால், பெரியோர் - மகான்கள், புகழ் - தோத்திரம் செய்கின்ற, சிறு அம்பலத்து உளோயை - சிதம்பரத்தின்கண் எழுந்தருளி யிருக்கப்பட்ட தேவரீரை, நாவால் - நாக்கினால், சிறியேன் - அல்பஞ்ஞனாகிய யான், துதி - தோத்திரம், செய்யும் - செய்கின்ற, இந் நன்கில் - இந்த நன்மை இல்லாத, சொல்லும் - வார்த்தையும், ஓவாது - இடையறாது, இரை-சப்தஞ் செய்து கொண்டிருக்கின்ற, ஓர் - ஒப்பற்ற, உழை - மான், தாவிய - தாவிக் கொண்டிருக்கின்ற, உன் - தேவரீரது, செவிக்கு - காதுக்கு, மேவாது அல - பொருந்தும், என்று - என, துணிந்து - நிச்சயித்து, விளம்பினேன் - கூறினேன். எ-று. ஏ ஏ-அசை.

விளம்பற்கருஞ் சோதியென் கோவிடை யோனென்கோவென்
னுளப்புக்கசி வப்பிர காசனென் கோவென்னங்கைத்
தளம்பற்றிய சாந்தனென் கோநின் றனதுநாமம்
வளம்பெற்றதி ருக்கபி லாயுசொல் வாயெனக்கே. (49)

(இ-ள்) வளம் - (சகல) வளங்களும், பெற்ற - பொருந்தியிருக்கின்ற, திருக் கயிலாய - அழகிய கைலாயத்தின்கண் எழுந்தருளியிருக்கப்பட்ட ஸ்வாமிங், நின்தனது - தேவரீரது, நாமம் - பெயரை, விளம்பற்கு - சொல்லற்கு, அரும் - அருமையான, சோதி - பிரகாச சொரூபர், என்கோ - என்று கூறவா, விடையோன் - ரிஷபவாகனாரூடர், என்கோ - என்று கூறவா, என் - அடியேனது, உளம் - மநத்தின்கண், புக்க - புகுந்திருக்கப்பட்ட, சிவப்பிரகாசன் - சிவப்பிரகாச சுவாமிகள், என்கோ - என்று கூறவா, என் - எனது, அம் - அழகிய, கைத்தளம் - உள்ளங் கையில், பற்றிய - பொருந்தி யிருக்கப்பட்ட, சாந்தன் - சாந்த லிங்கன், என்கோ - என்று கூறவா, எனக்கு - அடியேனுக்கு, சொல்வாய்-கூறுவாயாக. எ-று. ஏ-அசை.

எனக்கீந்தினி யாண்டிடல் வேண்டுமெம் மீசனேமற்
றுனக்கேசர ணஞ்சர ணம்புல னோடுமென்றன்
மநக்கோதனைத் தும்மிறந் தோங்கறி வாகியாங்கே
பினைக்காண்பவன் காட்சியு மற்றவ பேதவாழ்வே. (50)

(இ-ள்) எம் - எமது, ஈசனே - பரமேசனே, உனக்கே-தேவரீருக்கே, சரணம் - அடைக்கலம், சரணம் - அடைக்கலம், புலனோடும் - இந்திரியங்களோடும், என் - எனது, மந - மநத்தின்கண் உள்ள, கோது - குற்றங்கள், அனைத்தும் - யாவும், இறந்து-நசித்து, ஓங்கு - பூரண, அறிவு ஆகி - ஞாந சொரூபமாய், பினை - பின்னர், காண்பவன் - திருஷ்டாவும், காட்சியும் - திருக்கும் (திருசியமும்), அற்ற - நீங்கி இருக்கப்பட்ட, அபேத வாழ்வு - அத்வைத சாம்ராஜ்யத்தை, இனி - மேல், எனக்கு - அடியேனுக்கு, ஈந்து - கொடுத்து, ஆண்டிடல் வேண்டும் - ஆள வேண்டும். எ-று. ஆங்கு-மற்று. ஏ ஏ தன் அசை.

பக்தி சதகத்தில் உள்ள தோத்திரத்தின் தோத்திரப் பிரகாசம் என்னும் உரை முற்றுப் பெற்றது.

திருப் பூவண மடாதிபதி

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

இயற்றிய நூல்கள்.

| | | ரூ. | அ |
|---|---|---|---|
| 1. | மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தும் சதாநந்த அவதூத பாஷ்யமும் | 0 | 8 |
| 2. | வியாச தாத்பரிய நிர்ணயம் | 0 | 8 |
| 3. | நைஷ்கர்ம்ய சித்தி | 0 | 8 |
| 4. | ஸ்வாராஜ்ய சித்தி | 0 | 8 |
| 5. | வேதாந்த சஞ்ஞா | 0 | 2 |
| 6. | சீடாசாரம் மூலமும் பால போதினி உரையும் | 0 | 4 |
| 7. | ஈசாவாஸ்யோபநிஷத்தும் சாங்கர பாஷ்யமும் | 0 | 4 |
| 8. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா | 2 | 0 |
| 9. | விசார சாகரம் | 2 | 0 |
| 10. | கீதாத் திரயம் (ஈசுவர கீதை பகவற் கீதை பிரஹ்ம கீதை) | | 0 |
| 11. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (ஒன்பது புத்தகம்) | 1 | 8 |
| 12. | பக்தி (வைராக்கிய) சதகத் தோத்திரமும் தோத்திரப் பிரகாச உரையும் | | 3 |
| 13. | பஞ்சதசி (செய்யுள்) | | 10 |